# சொல்வயல்

திங்கள் மின்னிதழ்

## சொல்வளமே மொழி வளம்

செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககத்தின் வெளியீடு

வயல் : 1 விளைச்சல் : 7 திருவள்ளுவர் ஆண்டு 2051 டிசம்பர் திங்கள் - 2020

அகரமுதலி இயக்ககத்திற்குப் புத்துயிர் ஊட்டிய முதலமைச்சர்!

வைப்பகக் கலைச்சொற்கள் !

வானூர்தியில் தமிழ் !

மாணவர்களால் மாணவர்களுக்காக...

நீரும் பேரும் !

எமனார்க்கிங்கு ஏது வேலை ?



# வைப்பகக் கலைச்சொற்கள்

1. Exchange bank – பணப்பரிமாற்றகம்
2. Bank deposit – வைப்பக வைப்புத் தொகை
3. Bank draft – வைப்பக வரைவோலை
4. Bank Guarantee – வைப்பகப் பொறுப்புறுதி
5. Bank instrument – வைப்பகக் காசாவணம்
6. Banker's cheque – வைப்பகக் காசோலை
7. Banking charges – வைப்பகக் கட்டணங்கள்
8. Blank cheque – வெற்றுக்காசோலை
9. Cash counter – பணம் செலுத்துமிடம்/ பணம் பெறுமிடம்
10. Cash security – பணப்பிணையம்
11. Cheque book – காசோலைக் கட்டு
12. Deposit account – வைப்புத்தொகைக் கணக்கு
13. Online accounting System – உடனிகழ் கணக்கீட்டு முறை
14. Remittance chalan – செலுத்துச்சீட்டு
15. Remittance Transfer – செலுத்துத்தொகை மாற்றம்
16. Savings account – சேமிப்புக்கணக்கு
17. Savings bank – சேமிப்பு வைப்பகம்
18. Savings deposit – சேமிப்பு வைப்புத் தொகை
19. Security deposit – பிணைவைப்புத்தொகை
20. A.T.M – தானியங்கிப் பணப்பொறி/ காசாள் கருவி
21. E-money order – மின் பணவிடை
22. Internet banking – இணைய வைப்பக முறை
23. Online registration – இணையவழிப்பதிவு
24. Term loan – காலவரைக்கடன்
25. Zero balance – சுழிய இருப்பு

சொற்குவை (sorkuvai.com) வலைத்தளத்தில் தமிழுக்கு நிகரான ஆங்கிலச் சொற்களையும், ஆங்கிலத்திற்கு நிகரான தமிழ்ச்சொற்களையும் பார்த்துப் பயன்கொள்ளலாம்.

# சொல்வயல்


செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககத்தின் வெளியீடு

திருவள்ளுவர் ஆண்டு 2051 - கார்த்திகை
டிசம்பர் 2020

ஆசிரியர் : தங்க. காமராசு
இயக்குநர்

பொறுப்பாசிரியர் : முனைவர் வே. கார்த்திக்

இதழ்க்குழு : திருமதி. ஜெ. சாந்தி
திரு. கி. இராமர்
திரு. ஏ. காந்தி
திரு. ப. தீபக்



செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககம்
முதல் தளம், நகராட்சி நிருவாக அலுவலகக் கட்டடம்,
எண்.75, சாந்தோம் நெடுஞ்சாலை, எம்.ஆர்.சி. நகர், சென்னை - 600 028.
கட்டணமில்லா அழைபேசி : 14469
மின்னஞ்சல் : solvayal@gmail.com
வலைத்தளம் : www.sorkuvai.com


உலகத் தமிழர்களின் படைப்புகள், செய்தித் துணுக்குகள், நிகழ்வுகளின் ஒளிப்படங்கள் ஆகியவை வரவேற்கப்படுகின்றன



# ஆசிரியர் பேசுகிறார்

அன்பானவர்களே வணக்கம்!

அகரமுதலித் திட்ட இயக்ககம் தரமணியிலிருந்து பட்டினப்பாக்கத்திற்கு மாற்றப்பட்டுவிட்டது. இயக்ககத்திற்கு ஒதுக்கப்பட்ட 2500 சதுரடிஇடம் போதுமானதாக இல்லையென்றாலும், அந்தப் பரப்பளவில் அனைத்து ஏந்துகளையும் கொண்டு வடிவமைக்கப்பட்டுள்ளது. அலுவலகத்திற்கு வருகைதருபவர்கள் வியப்புடன், “மென்பொருள் நிறுவனத்தைப் போலத் தொழில்நுட்பங்களுடன் நவீனமாக இருக்கிறது” என்று பாராட்டுகிறார்கள். இந்தப் பாராட்டுகள் எல்லாம் மாண்புமிகு முதலமைச்சர் அவர்களையும், மாண்புமிகு தமிழ்வளர்ச்சித்துறை அமைச்சர் அவர்களையும் மற்றும் அரசு செயலாளர் அவர்களையுமே சாரும். அவர்கள் இட்ட கட்டளையை நிறைவேற்றிய ஒரு அலுவலராக மட்டுமே நான்பணியாற்றியிருக்கிறேன்.

இயக்ககம் இன்னும் முறைப்படி திறக்கப் படவில்லை. மாண்புமிகு அமைச்சர் மற்றும் அரசு செயலாளருக்கு மடல் அனுப்பப்பட்டுள்ளது. அவர்கள் முடிவு செய்வார்கள். அதற்குள் இயக்ககத்தின் வடிவமைப்பைப் பற்றி சுருக்கமாகக் கூறிவிடுகிறேன். பார்ப்பவர்களை வாய்பிளந்து வியக்க வைக்கிறது 11 தளங்களைக் கொண்டு கண்ணாடி மாளிகையாக எழுப்பப்பட்டுள்ள நகர் நிருவாக அலுவலகக் கட்டடம். அதன் நுழைவுவாயிலாக முதல் தளத்தில் தமிழுக்கென்று ஓர் இயக்ககம் தொடங்கப்பெற்றது தமிழ்மொழிக்கு, தமிழ்நாட்டுக்கு அரசு கொடுக்கும் முகாமையைக் காட்டுகிறது.

வளாகத்திற்குள் நுழையும் சாந்தோம் சாலையில் இயக்ககப் பெயர்ப்பலகை பொருத்தப்பட்டுள்ளது. கட்டடத்தின் முதல் தளத்தில் வெண்பலகை ஒன்று வைக்கப்பட்டு அதில் நாள்தோறும் தமிழ்க் கலைச்சொற்கள் எழுதி, காட்சிப்படுத்தப்படுகின்றன. 5 மின்தூக்கிகள் பயன்படுத்தலாம். இரண்டு பக்கங்களிலும் மாடிப்படிகள். இயக்கக நுழைவு வாயிலில் தங்கம் போல ஒளிவிடும் பெயர்ப் பலகை. வரவேற்பு அறையின் முகப்பில் தங்கமுலாம் பூசப்பட்ட ‘மொழிஞாயிறு’ தேவநேயப்பாவாணரின் அரை உருவச்சிலை. ஏறக்குறைய 15 அகராதிப் பேராசிரியர்கள் ஆய்வுசெய்ய ஏற்ற திட்டப்பிரிவு. ஒவ்வொரு பேராசிரியருக்கும் தனித்தனியாகக் கணினி. அடுத்து ஏறக்குறைய 10ஆயிரம் நூல்களைக் கொண்ட நூல்நிலையம். நூல்நிலையத்திற்குள் கட்டணமில்லா அழைமையம். அடுத்து, சொற்குவைத் தொழில்நுட்பப் பிரிவில் மின்திரையும், மின் திரையின் வாயிலாகச் சொல்லாக்க வல்லுநர்கள் 20 பேர் அமர்ந்து சொல்லாக்கப் பணிகளில் ஈடுபடும் அளவிற்குக் கட்டமைப்புச் செய்யப்பட்டுள்ளன.

சொல்லாக்கப் பணியை மேற்கொள்பவர்கள் ஒவ்வொருவருக்கும் மடிக்கணினி இருக்கின்றது. இந்தச் ‘சொற்குவைத் தொழில்நுட்பப்பிரிவிற்கு’ வெளிப்பக்கத்திலிருந்தும் வர தனிவழியும் திறக்கப்பட்டுள்ளது. அடுத்து, இயக்ககத்தின் நடுப்புள்ளியாக இயக்குநரின் அறை அமைந்து உள்ளது. இயக்குநரின் அறையிலிருந்து இயக்ககம் முழுவதையும் கண்காணிப்பது போல் கண்ணாடிச் சாளரங்கள் இரண்டு வடிவமைக்கப்பட்டுள்ளன. அடுத்து, நிருவாகப்பிரிவும், நிருவாகப் பிரிவிற்குள் ஆவண அறையும் உள்ளன. ஒவ்வொரு அறையிலும் மறைகாணி (CCTV) கருவி பொருத்தப்பட்டு, அவற்றை இயக்குநர் அறையிலிருந்து பார்வையிடுவது போல் கணினித்திரை பொருத்தப்பட்டுள்ளது.

இதைத்தவிர அலுவலர்கள் வருகையையும் வெளியேற்றத்தையும் பதிவு செய்ய திட்டப்பிரிவின் நுழைவுவாயிலிலேயே (Bio-Metric) உயிரியளவுக் கருவி பொருத்தப்பட்டுள்ளது. இயக்கக வாசலில் ஒருபக்கத்தில் இயக்ககம் தற்போது செயற்படுத்தி வரும் திட்டங்கள் சார்ந்த தரவுகளுடன் கூடிய பதாகை வைக்கப்பட்டுள்ளது. இது தொடக்க நிலை வடிவமைப்புதான். இன்னும் பல தொழில்நுட்பங்கள் இயக்ககத்திற்குள் வரவிருக்கின்றன. தற்போதைக்கு ஒருமுன்மாதிரி அரசு அலுவலகமாக எல்லோராலும் பார்க்கப்படுகிறது. விரைவில் இவ்வியக்ககம் கலைக்கூடமாகவும், தொழிற்கூடமாகவும், பயிற்சிக் கூடமாகவும் மாறி தமிழுலகம் முழுமைக்கும் பயன்படப் போகின்றது.நீங்களும்ஒருமுறைஇவ்வியக்ககத்திற்கு நேரில் வந்து தமிழ்நாடு அரசையும், தமிழ்நாட்டின் முதலமைச்சரையும் பாராட்டிச் செல்லுங்கள்.

மீண்டும் சந்திப்போம்...

# அறிய வேண்டிய அரிய செய்தி - 7

## 'கவரிமா'வா ? கவரிமானா ?

"மயிர்நீப்பின் வாழாக் கவரிமா அன்னார்
உயிர்நீப்பர் மானம் வரின்" (குறள். 969)

இக்குறள் 'மானம்' என்ற அதிகாரத்தில் இடம் பெற்றுள்ளது. தன் உடம்பிலிருந்து ஒரு முடி கீழே உதிர்ந்தால் அது மானக்கேடு என்று கருதி உயிர் வாழாது இறந்துவிடும் கவரிமானைப் போன்றே சான்றோர்கள் தங்களின் மானத்திற்கு ஏதேனும் தீங்கு ஏற்படின் அதற்கு நாணி இறந்து விடுவார்கள் என்பதே இக்குறளுக்கு உரையாசிரியர்கள் காணும் உரையாகும்.

**கல்லாதார் நாவில் கவரிமான்**

பேச்சு வழக்கில் கல்லாதார் நாவில் அடிக்கடி பயன்படும் சொல் கவரிமான் ஆகும். அதோ வருகிறார் கவரிமான் சாதியைச் சேர்ந்தவர் என்று தங்களுக்குள் நகைமொழியாக இச்சொல்லைப் பயன்படுத்தி வருகிறார்கள். இச்சொல் கல்லாதார் நாவில் நளிநடம் புரிவதற்கு யார் காரணம் ? இக்குறள் விந்தையான குறளாகும். பள்ளி, கல்லூரிகளில் பணிபுரியும் தமிழாசிரியர்கள் இக்குறளுக்கு அளித்த விளக்கமே இன்று பட்டிதொட்டிகளில் எல்லாம் பரவி உள்ளது என்று எண்ணத் தோன்றுகிறது.

**அகரமுதலியில் கவரிமான்**

செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலியின் இரண்டாம் மடலம் முதற்பாகத்தில் (பக்கம் 582இல்)

கவரிமான் – என்ற தலைப்புச் சொல் இடம் பெற்றுள்ளது. இதில் கவரிமா பார்க்க என்று குறிப்பிடப்பட்டுள்ளதோடு, "மயிர் நீப்பின்" என்ற இதே குறள் மேற்கோளாகக் குறிக்கப்பட்டுள்ளது.

கவரிமா – என்ற தலைப்புச் சொல்லில் மான் வகை a kind of deer; yak எனப் பொருள் தரப்பட்டுள்ளது.

**இலக்கியங்களில் கவரிமா**

"கவரிமுச்சிக் கார்விரி கூந்தல்
ஊசல் மேவற் சேயிழை மகளிர்

என்று பதிற்றுப்பத்தில் (43:1) இச்சொல் இடம் பெற்றுள்ளது. கவரிமானது கொண்டை முடிபோல முடிந்த உச்சிக் கொண்டையை உடைய மகளிர் என்ற பொருளில்,

நரந்தை நறும்புல் மேய்ந்த கவரி
தகரத் தண்ணிழல் பிணையொடு வதியும் (புறம். 132)

என்ற புறநானூற்று வரிகள் அமைந்துள்ளன.

**கவரிமா**

அரிமா, பரிமா, நரிமா, கரிமா போன்றே கவரிமாவும் ஒன்றாகும். இது திபெத் நாட்டில் மிக உயர்ந்த மலைகளில் வாழும் ஒரு வகை எருதாகும் (Yak). இது குளிர்காலத்தில் கூட 14,000 அடி முதல் 20,000 அடிக்கு மேலே வாழும்; கீழே வருவதில்லை. குளிர் மிகுந்த மலைப்பகுதியில் வாழ்வதால் தகவமைப்பாக Survival of the fittest என்ற அடிப்படையில் கடுங் குளிரைத் தாங்குவதற்கு உடல் முழுதும் அடர்ந்த மயிரினைப் பெற்றுள்ளது. இந்த மயிர் உதிர்ந்துவிட்டால் குளிரைத் தாங்காமல் இறக்க நேரிடுகிறது. இந்தக் கவரிமாவையே கவரிமான் என்று நாம் தவறாகக் குறிப்பிட்டு வருகிறோம். .

**முடிவுகள்**

1. கவரிமா என்று வள்ளுவர் கூறியதைக் கவரிமான் என்று கருதிவிட்டனர்.

2. மயிர் என்று வள்ளுவர் பொதுவாகக் கூறியதை ஒரு மயிர் என்று கருதிவிட்டனர்.

3. வாழாக் கவரிமா என்பதற்குக் குளிர்தாங்காமல் இறந்து போவது என்பது பொருள். ஆனால் வாழ முடியாததால் என்று கொள்ளாமல் ஒரு மயிரை இழந்த மானக்கேட்டால் அந்த இடத்திலேயே உயிர்விடுகின்றது எனத் தவறாகப் பொருளுரைத்துள்ளனர்.

4. கவரிமா மானம் உடைய விலங்கு என்று கருதிவிட்டனர்.

5. உடம்பில் ஒரு மயிரேனும் உதிராமல் இருப்பது இயற்கைக்கு முற்றும் முரணானது; உதிர உதிரத்தான் முடிவளரும் என்பது விலங்கியலாளர் கூற்று.

ஆகவே இனிவருங்காலங்களில் இக்குறளின் உண்மைத் தன்மையை உணர்ந்து பொருள் கொண்டு மாணவர்களுக்குக் கற்றுக் கொடுப்பதோடு, கவரிமான் இல்லை கவரிமாவே என்று நாமும் தெளிவோமாக.

சு.வீரவேலு
பதிப்பாசிரியர் – அகரமுதலி இயக்ககம்




## இண்டிகோ வானூர்தி நிறுவனத்திற்கு அகரமுதலி இயக்ககம் பாராட்டு!

தமிழ்நாட்டிற்குள் பறக்கும் வானூர்திகளில் தமிழில் அறிவிப்புகள் செய்ய வேண்டும் என்ற கோரிக்கை பல ஆண்டுகளாக இருந்து வந்த நிலையில், இண்டிகோ வானூர்தியில் திருச்சியிலிருந்து மதுரைக்குப் பறக்கும் வானூர்தியில் பிரிய விக்னேஷ் என்ற வலவன் (விமானி) தூயதமிழில் அறிவிப்புச் செய்வது அனைவரையும் கவர்ந்துள்ளது. மற்ற வானூர்தி நிறுவனங்களும் இந்த முறையைப் பின்பற்றி தமிழில் அறிவிப்புச் செய்யவேண்டும் என்று செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககம் செய்தி வெளியிட்டிருப்பதுடன் இண்டிகோ வானூர்தி நிறுவனத்திற்கும் கீழ்க்கண்டவாறு பாராட்டுத் தெரிவித்துள்ளது.

காற்று வெளியிடையே கனித்தமிழ் விதைக்கும்

இண்டிகோ நிறுவனத்தார்க்கு இன்தமிழ் நன்றி!

“தேமதுரத் தமிழோசை உலகமெலாம் பரவும்வகை செய்தல் வேண்டும்” என்பது மகாகவி பாரதியின் மனங்கொள் ஆசை. அந்தச் சீரிய சிந்தனைக்குச் செயல்வடிவம் கொடுத்திட அனைத்துத் துறைகளிலும் அருந்தமிழ் நிறைந்து வழங்க வேண்டும். அதிலும் குறிப்பாக வான்வழிச் செல்லும் வானூர்திகளின் அறிவிப்புகளிலும் “வானம் அளந்தது அனைத்தும் அளந்திடும் வண்மொழி”யாகிய தமிழ்மொழி இடம் பெற வேண்டும் என்பது தமிழ்கூறும் நல்லுலகத்தின் தனிப்பெரும் தணியா வேட்கை. அந்த வேட்கை வேரில் நீர் வார்க்கும் கார்முகில் போல, சென்னை – மதுரை வான்வெளி வழித்தடத்தில் செல்லும் இண்டிகோ வானூர்திகளில் செந்தமிழிலும் அறிவிப்புகள் செய்து செவியோடு சிந்தை இனிக்கச் செய்யும் செம்மாந்த பணியைச் செய்து வரும் இண்டிகோ நிறுவனத்தாரை நற்றமிழால் வாழ்த்தி மொழிகிறோம் நன்றி. தங்களால் சிறகு விரித்திருக்கும் இந்தத் தமிழ்ப்பணி ஏனைய வானூர்தி நிறுவனத்தாருக்கும் வழிகாட்டும் முன்மாதிரியாய் வாய்த்திருப்பதால் உங்களுக்கு வளர்தமிழால் வாழ்த்துகளைத் தெரிவிப்பதில் மகிழ்வும் பெருமையும் கொள்கிறோம்.

வளர்தமிழை வான்தமிழாக்கிய இண்டிகோ நிறுவனத்தார்க்கு வாழ்த்துகளும் நன்றிகளும்.

### பாயிர வகைகள்

**முகவுரை :** நூல் முகத்தில் உரைக்கப்படுவது **பதிகம்:** ஆக்கியோன் பெயர், நூல் வந்தவழி முதலிய பத்துப் பொருள்களைக் கூறுவது **அணிந்துரை:** நூலுக்கு அழகு செய்துநிற்பது **நூன்முகம்:** நூலின் தொடக்கமாயிருப்பது **புறவுரை :** நூலின் இறுதியில் உரைக்கப்படுவது **தந்துரை:** நூலில் சொல்லப்படாத பொருளைத் தந்துரைப்பது **புனைந்துரை:** நூலைச் சிறப்பித்துரைப்பது.

– நன்றி: பாவாணர் தமிழ்க் களஞ்சியம்– 21

# "எமனார்க்கிங்கு ஏது வேலை நாமிருக்குமிடத்தே..."



**மரு. ம. மீனாட்சிசுந்தரம்**
பேராசிரியர் மற்றும் துறைத் தலைவர்
குழந்தை மருத்துவத்துறை
தேசிய சித்த மருத்துவ நிறுவனம்
தாம்பரம் சானடோரியம், சென்னை

நமது இந்தியத் திருநாட்டின் தென்கோடி பகுதியில் மிகவும் தொன்மை வாய்ந்த, முழுமைபெற்ற ஒரு மருத்துவ முறையாக, தமிழரின் வாழ்வியல் வழிமுறையாக விளங்கிய ஒரு சிறந்த மருத்துவ முறையே சித்த மருத்துவமாகும். மெய்ஞ்ஞானத்தோடு தொடர்புடையதாக இருந்தாலும், சித்த மருத்துவம் கூறும் நெறிகள் அறிவியல் பூர்வமானவை; இயற்கையோடு இயைந்து செல்லக்கூடியவை. தொன்மை வாய்ந்த இந்த மருத்துவமுறையானது, வழிவழியாக, பல யுகங்களைக் கடந்து இன்றளவும் மக்களுக்குப் பயன் தரக்கூடியதாக நிலைபெற்றுள்ளது. இம்மருத்துவமுறையின் தொன்மையை அறுதியிட்டுக் கூறமுடியாவிட்டாலும், சித்த மருத்துவக் கருத்துகள் நவீன தொழில்நுட்பக் கணினி யுகத்திற்கும் ஏற்புடையதாகும். இம் மருத்துவ முறையின் அடிப்படைக் கருத்தானது "உணவே மருந்து; மருந்தே உணவு" என்பதாகும். இதுமட்டுமல்லாது நோய் அணுகாது தவிர்க்கும் முறையை வலியுறுத்துவதாகவும் அமைந்துள்ளது. நோயில்லாமல் நீண்ட நெடுங்காலம் வாழும் முறையை மக்களுக்குக் கற்றுத்தரும் மருத்துவமே சித்த மருத்துவமாகும். நோயில்லாமல் வாழும் முறையைத் தேரையர் என்ற சித்தர் பெருமானார் ஒரு விதியாகவே வகுத்து, தன் நூலில் விரிவாக விளக்கியுள்ளார். அந்த விதிகளின் முதல் சொற்றொடரே,

"பாலுண்போம்; எண்ணெய்பெறின் வெந்நீரில் குளிப்போம்;"

என்பதாகும். இதன் விளக்கம் "இரவில் பசுவின் பாலையே உண்போம். (மந்தந்தரும் வேறு பாலெதுவும் உண்ணோம்). எண்ணெயிட்டுத் தலை முழுகும் போதெல்லாம் வெந்நீரிலேயே குளிப்போம்" என்பதாகும்.

**பாலுண்போம்**

சிறுகுழந்தைகள் முதல் பெரியவர்கள் வரை பால் இன்றியமையாத உணவாகும். பசும்புல்லைத் தீனியாகக் கொள்ளும் பசுவின் பால் மிகவும் சிறந்தது. பசும்பால் கறந்த உடனே உண்பதனால் உண்டாகும் பயன்கள் பற்றி சித்தர்கள் பல ஆண்டுகளுக்கு முன்பே விளக்கியுள்ளனர். பசும்பாலைக் கறந்த இரண்டு மணி நேரத்துக்குள்ளேயே குடிப்பது நல்லது. அவ்வாறு உண்டால் அந்தப் பால், தேவாமிர்தத்துக்கு ஒப்பாகும். காலையில் காய்ச்சாத பசும்பால் குடிப்பதால் கை கால் எரிச்சல், உடல் எரிச்சல், மஞ்சள் காமாலை, வெளுப்பு நோய், இரத்தபித்தம், மார்புச்சளி போன்ற நோய்கள் தீரும். தேகம் ஒளிவிடும். தாது விருத்தி உண்டாகும். சித்த மருத்துவ முறையில் மூல நோய், இரத்த மூலம், மஞ்சள் காமாலை, குடற்புண், தோல் நோய்கள் போன்ற நோய்களைக் குணப்படுத்த பசும்பால் மிகவும் நல்ல உணவாகும். சுவாசப் பாதையில் நோய் உள்ளவர்கள் பாலுடன் கார்ப்புச் சுவையுள்ள மிளகு, திப்பிலி போன்ற மருந்துப் பொருட்களைச் சேர்த்துப் பருகலாம். அதனுடன் பனங்கற்கண்டு சேர்த்து அருந்தலாம். இதனால் அந்நோய் கட்டுப்படுவதுடன் சுக்கிலமும் விருத்தியாகும். பாலில், மஞ்சள் தூள் கலந்து பருகுவது நோய் எதிர்ப்புசக்தியை அதிகரிக்கும்.

பசும்பால் 90% நீர்த்தன்மையுடன் அடர்த்தி குறைவாகவும், எளிதில் செரிக்கக்கூடியதும் ஆகும். பசும்பாலில் புரதம், கொழுப்பு மற்றும் கார்போஹைட்ரேட் உள்ளது. நாட்டு பசுக்களின் பாலில் உடலுக்கு வலிமை தரும் வகையிலான புரதம் உள்ளது. பால் கெசின் என்னும் அந்தப் புரதம் உடலை வலிமை அடையச் செய்கிறது.

பால் என்பது கால்சியம் நிறைந்த, உடலுக்குத் தேவையான ஒரு முழு உணவாகப் பார்க்கப்படுகிறது. உடல் எடையைப் பாதுகாக்கவும், கலோரிகளை எரிக்கவும் பால் உதவுகிறது. மேலும் பால் குடிப்பதால் உடலுக்கு நல்ல சக்தியையும், எலும்புகளுக்கு உறுதியையும் அளிக்கிறது. மேலும், வைட்டமின் சத்துகள், பொட்டாசியம், மெக்னீசியம் போன்ற சத்துகள் பாலில் அதிக அளவில் இருக்கின்றன.

தினமும் பால் குடித்தால் உடல் ஆரோக்கிய மானதாக இருக்கும் என்று பலர் கூறுவர். அதற்கேற்பப் பாலில் பல நன்மைகள் நிறைந்திருக்கின்றன. இதனாலேயே சித்தர்கள் "பாலுண்போம்" என்று கூறியுள்ளார்கள்.

**எண்ணெய் பெறின் வெந்நீரில் குளிப்போம்**

நம்முடைய காலைக்கடன் பணிகளில் மிகவும் முக்கியமானது குளித்தலாகும். அதனால் நம் உடல் தூய்மை அடைவதுடன், புத்துணர்ச்சியும் ஏற்படுகிறது. தினமும் உடலைத் தூய்மை செய்வதனால் நோய் அண்டாமல் நம் உடலைப் பாதுகாக்க முடிகிறது. அது மட்டுமல்லாமல் நம் உடல் வெப்ப நிலையும் சீராகப் பராமரிக்கப்படுகிறது. வியர்வையினால் சேரும் அழுக்குகள் நீக்கப்படுகின்றன. அதனால் ஏற்படும் உடல் துர்நாற்றமும் அகற்றப்படுகிறது. அழுக்கில் சேரும் நோய்க்கிருமிகளும் அதனால் உண்டாகும் நோய்களும் தடுக்கப்படுகின்றன. காலை நேரத்தில் குளிப்பதனையே சித்தர்கள் வலியுறுத்தி உள்ளார்கள். பகலில் உழைப்பின் காரணமாகத் தோன்றும் வியர்வை மற்றும் அழுக்குகளைக் கழுவுவதற்கு மாலை நேரத்தில் குளியல் செய்யலாம். இதனால் இரவில் அமைதியான உறக்கம் உண்டாகும். குளிக்கும் போது உடல் முழுமையும் நனையுமாறு தலையில் நீர் சொரிந்து குளிக்க வேண்டும். கழுத்துக்குக் கீழ் குளித்தல் கூடாது. அவ்வாறு குளிப்பதனால் நனைந்த பக்கத்தில் இருக்கும் தோடம் (குற்றம்) நனையாத பக்கத்தில் பரவி, அங்கு நோயினை உண்டாக்கும்.

வாரத்திற்கு இரண்டு நாட்கள் எண்ணெய்க் குளியல் செய்யவேண்டும் என்று சித்த மருத்துவம் கூறுகிறது. பொதுவாக ஆண்கள் புதன் மற்றும் சனிக் கிழமைகளிலும், பெண்கள் செவ்வாய் மற்றும் வெள்ளிக் கிழமைகளிலும் எண்ணெய் முழுக்குச் செய்யவேண்டும் என்று நூல்கள் சொல்கின்றன.

இவ்வாறு, எண்ணெய் தேய்த்துக் குளிப்பதனால் தலையின் தொந்தரவும், கண்களின் தொந்தரவும், காதுகளின் தொந்தரவும் தடுக்கப்படுகின்றது. மேலும் எண்ணெய் தேய்த்து எல்லா அங்கங்களையும் பிடித்தும், குத்தியும், தட்டியும் விடுவதால் அவைகளில் இரத்த ஓட்டம் அதிகமாகிறது. அதனால் அவ்வுறுப்புகள் பலம் பெற்றுப் புத்துணர்ச்சி பெறுகின்றன. எண்ணெய் தேய்த்துக் குளிப்பதனால் வாய், கண், மூக்கு, காது மற்றும் தோல் முதலிய ஐந்து இந்திரியங்களுக்கும் வன்மை உண்டாகும். மேலும் தலைமுடி நீண்டு வளரும். தலை, கை, கால், முழங்கால் இவைகளுக்கு பலம் பெருகும். தோல் மினுமினுப்பும் பளபளப்பும் பெறும். உடலில் உண்டாகும் வறட்சி, சொரி தினவு, அழுக்கு ஆகியவை எண்ணெய் தேய்த்துக் குளிப்பதனால் ஏற்படாமல் தடுக்கப்படுகிறது. தினந்தோறும் எண்ணெய் தேய்த்துக் குளிப்பதால் உடல் வலி அறவே நீங்கிவிடும்; தோல் சுருக்கம் ஏற்படாமல் கிழத்தன்மை விரைவில் உண்டாகாமல் தடுக்கப்படுகிறது; கண்கள் தெளிவுபெறும்; ஆயுள் விருத்தி உண்டாகும்.

ஐய நோயினால் அவதி உற்றவர்கள், அசீரணம் உடையவர்கள், வாந்தி மற்றும் பேதி மருந்து உண்டவர்கள் எண்ணெய் முழுக்குச் செய்வதை விலக்க வேண்டும்.

எண்ணெய் முழுக்குச் செய்யும் பொழுது, கண்டிப்பாக வெந்நீரிலேயே குளிக்க வேண்டும். அப்போது தான், உடலில் பூசப்பட்ட எண்ணெயானது, நம் தோலின் மேல் ஒரு படலத்தை மினுமினுப்பாகத் தோன்றச் செய்யும். அந்தப் படலமானது, தோலுக்கு ஒரு பாதுகாப்புப் படிவமாக அமைந்து, தோல் நோய்கள் ஏற்படாதவாறு தடுக்கிறது. மஞ்சள் காப்பு, எண்ணெய் முழுக்குச் செய்வதனால் மலேரியா என்ற முறைச்சுரத்தைப் பரவச் செய்யும் கொசுக்கள் கடிப்பதில்லை என்ற ஆராய்ச்சித் தகவல் கிடைத்துள்ளது.

எண்ணெய்ச் சிக்குப் போவதற்குப் பயன்படுத்தப் படும் சிகைக்காய், அரப்பு, பாசிப்பயறு, நலங்குமா போன்ற மருந்துப் பொருட்கள், தோல், தலை மற்றும் உடல் மயிர்களில் சேரும் நோய்க்கிருமிகளை நீக்குவதோடு மிகுந்த நறுமணத்தையும் கொடுக்கின்றன. எண்ணெய்க்குளியலினால், உள்ளுறுப்புகளின் கழிவுகள் நீக்கப்படுகின்றன; மூச்சு சீரடைகிறது; இதயம் சீராக இயங்குகிறது; மூளை நரம்புகள் புத்துணர்வு பெறுகின்றன; கண்கள் குளிர்ச்சியடைகின்றன; பார்வை தெளிவாகிறது; உடலின் தோல் மினுமினுப்படைகிறது; தோல் நோய்கள் தவிர்க்கப்படுகின்றன.

எண்ணெய் தேய்த்துக் குளிப்பதால், நமது உடலில் கேடடைந்த குற்றங்கள் இயல்பான நிலைக்கு வருகின்றன. முக்கியமாக, அழல் குற்றமானது, நன்னிலைக்குத் திரும்புகின்றது. குற்றங்கள் மூன்றும் (வளி, அழல் மற்றும் ஐயம்) அதனதன் மாத்திரை அளவான ஒன்று, அரை, கால் என்ற நிலையில் உடலில் இயங்குகிறது. இதன் காரணமாக, நமது உடலில் நடைபெறுகின்ற அனைத்து உடலியங்கு செயல்களும் (Physiological functions) உச்சநிலையில் நடைபெறுகின்றன. அதனால் நோயெதிர்ப்பு ஆற்றல் (Immunity) அதிகரிக்கிறது. உள்ளிடைச் சுரப்பி கோளங்களின் (endocrine glands) செயல்பாடு இயல்பு நிலையில் இயங்குகின்றது. இத்துணை காரணங்களால் உடலுக்குக் கேடு உண்டாக்கும் நோய்க்கூட்டங்கள் அனைத்தும் தவிர்க்கப்படுகின்றன. தொற்றும் மற்றும் தொற்றாப் பிணிக்கூட்டங்கள் அனைத்தும் அணுகாமல் தடுக்கப்படுகின்றன.

இந்தக் காரணங்களால், பிணி அணுகாமல் தடுக்கப்படுகிறது. எனவே, "எமனார்க்கிங்கு ஏது வேலை ?"

# அகரமுதலி இயக்ககத்திற்குப் புத்துயிர் ஊட்டிய முதலமைச்சர்!

செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககமானது 1974 ஆம் ஆண்டு தமிழ்நாடு அரசால் துறைத் தலைமை இயக்ககமாகத் தொடங்கப் பெற்றது.

தமிழ்மொழியிலுள்ள சொற்கள் அனைத்தையும் நிரல்படுத்தி, சொற்பிறப்பு, வேர்சொல், அச்சொல்லுக் கான வரலாறு, அதற்கான இலக்கண, இலக்கிய மேற்கோள்கள் ஆகியவற்றை உள்ளடக்கி பேரகராதியாக உருவாக்கினால், அச்சொற்கள் தலைமுறை தலைமுறையாகப் பாதுகாக்கப்பெறும் என்ற தொலைநோக்குப் பார்வையுடன், தன் வாழ்நாள் முழுவதையும் தமிழ்அகராதிப் பணியிலும், சொல்லாராய்ச்சிப் பணியிலும் செலவிட்டு வந்த ‘மொழிஞாயிறு’ தேவநேயப்பாவாணர் அவர்களையே முதல் இயக்குநராகக் கொண்டு இவ்வியக்ககம் தொடங்கப் பெற்றது.

தேவநேயப்பாவாணரின் வேர்ச்சொல் குறிப்புகளின் அடிப்படையில் தொகுக்கப்பெற்ற சொற்பிறப்பியல் பேரகர முதலியின் 31 தொகுதிகள் வெளிவந்ததன் வாயிலாக இத்திட்ட இயக்ககம் தொடங்கப் பெற்றதற்கான நோக்கம் வெற்றி பெற்றது. பாவாணரால் தொகுக்கப் பெற்ற பேரகராதிகளை வெளியிட்டதின் மூலம் அந்தத் திட்டம் நிறைவடைந்ததே அல்லாமல் இயக்கக அகராதிப் பணிகள் நிறைவடையவில்லை. ஒரு மொழின் உயிர் மூச்சே அதன் சொற்கள் தான் எனும்போது, அம்மொழி இருக்கும் வரை அகராதிப் பணிகள் நிறைவடையாது. இது உலக மொழிகள் அத்தனைக்கும் பொருந்தும். பாவாணரின் பேரகராதிப் பணிகள் நிறைவுற்றபோது செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககம் என்ற நீண்ட பெயரைத் ‘தமிழ் அகராதி இயக்ககம்’ என்று சுருக்கி அரசாணை பெற்றிருக்கலாம்.

பத்து இலட்சம் பேர் மட்டுமே பேசக்கூடிய மொழிகளுக்குக்கூட அகராதிக்கென்று அந்தந்த நாடுகளில் தனித்துறை தொடர்ந்து இயங்கும்போது பலகோடி மக்கள் உலகம் முழுவதும் பேசிக் கொண்டிருக்கின்ற தமிழ்மொழிக்கு அகராதியின் தேவை எவ்வளவு இருக்கும் என்பதனைத் தமிழ்நாடு அரசும் நன்கு உணர்ந்திருக்கிறது. இதையெல்லாம் உணர்ந்துதான் இந்த அரிய அகராதிப் பணிகளை மேற்கொண்டு கடுமையாக உழைத்துக் கொண்டிருந்த பாவாணரை அப்போதைய












முதலமைச்சர் புரட்சித் தலைவர் எம்.ஜி.ஆர். அவர்கள் அரவணைத்தார்கள். புரட்சித் தலைவி அவர்கள் அகராதிகளின் மேன்மையையும் அவசியத்தையும் பல இடங்களில் சுட்டிக்காட்டிப் பேசியிருக்கிறார். 1995ஆம் ஆண்டு தஞ்சைத் தமிழ்மண்ணில் நடைபெற்ற எட்டாவது உலகத் தமிழ் மாநாட்டின்போது ‘‘ஒரு மொழியில் சொற்பிறப்பியல் அகரமுதலி அதாவது Etymological Dictionary தயாரிப்பது என்பது ஒரு கடினமான பணியாகும். பன்மொழியியல் வல்லுநர்களும், பல்துறை அறிஞர்களும் ஒருங்கே சேர்ந்து ஆற்ற வேண்டிய மிகப் பெரிய பணியாகும்’’ என்று பேசியிருப்பது இதற்குச் சான்று.

அகரமுதலித் திட்ட இயக்ககம் ஒரு சவலைப் பிள்ளையைப் போல வளராமல் 45 ஆண்டுக் காலமாக நான்கு சுவருக்குள் முடங்கிக் கிடந்தது ஏன் ? என்ற கேள்வி என்னைப் போன்றவர்களை உறுத்தத்தான் செய்கின்றது. ஆனால், இன்று அகரமுதலித் திட்ட இயக்ககத்தின் வளர்ச்சி பலரையும் வியப்புக்குள்ளாக்கியிருக்கிறது.

அந்தச் சவலைப் பிள்ளையை ஊட்டச் சத்துக் கொடுத்து எழுந்து நடக்க செய்ததோடல்லாமல் ஒலிம்பிக் போட்டியிலும் ஓட வைத்து அழகு பார்த்தவர் மாண்புமிகு முதலமைச்சர் எடப்பாடி கே.பழனிசாமி அவர்கள்.

2018 ஆம் ஆண்டு தமிழ் வளர்ச்சித்துறையில் துணை இயக்குநர் பதவி உயர்வுக்காகக் காத்திருந்த என்னை மாண்புமிகு முதலமைச்சர் அவர்கள், செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககஇயக்குநராக அமர்த்திதன் திருக்கரங்களால் 23.05.2018 அன்று ஆணை வழங்கியபோது ‘‘தாய்மொழிக்காகவும் இயக்ககத்திற்காகவும்







அர்ப்பணிப்போடு பணியாற்றுங்கள்'' என்று வாழ்த்துதலை வலியுறுத்தலாக என்னிடம் பதிவு செய்தார்கள். அந்த வலியுறுத்தல்தான் என்னை முடுக்கிவிட்டு அல்லும் பகலும் இந்த இயக்கக வளர்ச்சிக்காக உழைக்கத் தூண்டியது. அகரமுதலியின் வளர்ச்சிப் பணியைச் சுழியத்திலிருந்தே தொடங்க வேண்டிய நிலை. வளர்ச்சிக்கான வலிமையான திட்டங்களோ, இவ்வியக்ககத்தைப் பற்றிய விழிப்புணர்வோ போதுமான அளவிற்கு யாருக்கும் ஏற்பட்டிருக்கவில்லை.

சில நல்ல உள்ளங்கள் போட்ட மொழிச் சிந்தனைதான் விதையாக விழுந்து 'சொற்குவை'யாக முளைவிடத் தொடங்கியிருந்தது. அது துளிர்விட்டு வளர்வதற்காக மாண்புமிகு முதலமைச்சர் அவர்கள் ஒரு கோடி ரூபாய் சொற்குவைத் திட்டத்திற்காக ஒதுக்கீடுசெய்து அறிவித்தார்கள்.

வறண்டு வெடித்துக்கிடந்த பூமியில் மழை பொழிந்ததைப் போலச் சொற்குவைத் திட்டம் இயக்ககத்தின் வறட்சியைப் போக்கிப் பசுமை யாக்கியது 'சொற்குவை'யைத் தன் உள்ளத்தில் சுமந்து பரப்புரை செய்து மாணவர்களைத் திரட்டிய பெருமை மாண்புமிகு தமிழ்வளர்ச்சி மற்றும் தமிழர் பண்பாட்டுத்துறை அமைச்சர் திரு. க. பாண்டியராசன் அவர்களையே சாரும். 'சொற்குவை'த் திட்டத்தைத் தமிழ் வளர்ச்சியின் 'விண்மீன்' திட்டம் என்று பலரும் பாராட்டினார்கள். முடங்கிக் கிடந்த அரகமுதலி இயக்ககம் 'சொற்குவை'த் திட்டத்தின் வாயிலாக வெளிச்சத்திற்கு வந்தது. இன்று அகரமுதலி இயக்ககம் கோரும் அனைத்துத் திட்டங்களையும் ஏற்றுக் கொண்டு அரசாணை பிறப்பிக்க அரசு முனைவதே இவ்வியக்ககத்திற்குக் கிடைத்த வெற்றி.

## தமிழ்க் கலைக்கழக மதிப்புறு உறுப்பினர் திரு.ப.முத்துக்குமாரசாமி மறைந்தார் !



மூத்த எழுத்தாளர் திரு. ப.முத்துக்குமாரசாமி (85) இதுவரை 107 நூல்களைப் படைத்துள்ளார். பல வெளிநாடுகளுக்குச் சென்று மாநாடு, ஆய்வரங்குகளில் ஆராய்ச்சிக் கட்டுரைகளைப் படித்துள்ளார். தமிழ்நாடு அரசின் விருதுகளையும், தமிழ் அமைப்புகளின் விருதுகளையும் பெற்றுள்ளார். அன்னார் செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககத் தமிழ்க்கலைக் கழகத்தின் மதிப்புறு உறுப்பினராக இருந்து பல்வேறு ஆலோசனைகளை வழங்கியுள்ளார். அவர் 29.10.2020 ஆம் நாள் உடல்நலக் குறைவு காரணமாகக் காலமானார். அவரின் மறைவு தமிழுலகத்திற்குப் பேரிழப்பை ஏற்படுத்தியுள்ளது.



இருக்கின்ற குறைந்தளவு பணியாளர்களைக் கொண்டு கடுமையாக உழைத்து இவ்வியக்ககத்தை மற்ற இயக்ககங்களுக்கு நிகராக நிலைநிறுத்தும் முயற்சியை அகர முதலி இயக்ககம் மேற்கொண்டுள்ளது. இன்று அரசும், மக்களும் இயக்ககத்தைப் பாராட்டும்போது மனம் நிறைவடைகிறது. அரசின் பாராட்டுகள் இயக்கக வளர்ச்சிக்கு உதவுமா ? என்றால் உறுதியாக உதவும். அதற்கு 2020–2021ஆம் நிதி ஆண்டிற்கு அரசு எங்களுக்கு வழங்கி வருகின்ற திட்டங்கள் எங்களை வலிமைப்படுத்தும். அதோடு மட்டுமல்லாமல் கீழ்க்கண்ட எங்கள் விருப்பங்களையும் அரசு நிச்சயம் நிறைவேற்றித்தரும் என்ற நம்பிக்கை எங்களுக்கு இருக்கிறது.

1. திரைப்பட, சின்னதிரை நிகழ்ச்சிகளின் தணிக்கைத் துறையில் அகரமுதலி இயக்கக இயக்குநர் ஓர் உறுப்பினராக இருக்க வேண்டும்.

2. தூயதமிழில் பேசுவதற்கும், எழுதுவதற்கும் சொல்லுருவாக்கத்திற்கும் கல்லூரி–பள்ளி மாணாக்கர்களுக்கு அகரமுதலி இயக்கக இயக்ககம் வழியாகப் பயிற்சியளிக்க வேண்டும்.

3. இவ்வியக்ககத்தால் வடிவமைக்கப்படும் கலைச்சொற்களே அனுமதிக்கப்பட்ட தமிழ்ச் சொற்களாகும் என்று அரசாணை பிறப்பிக்க வேண்டும்.

4. கோப்புகளில், மடல்களில் தூயதமிழைப் பயன்படுத்த தமிழ்வளர்ச்சி இயக்ககம், உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், உலகத் தமிழ்ச் சங்கம் போன்ற அரசு அமைப்புகளில் பணிபுரியும் பணியாளர்களுக்கும், தலைமைச் செயலகம் உள்ளிட்ட ஏனைய அரசுப் பணியாளர்களுக்கும், அலுவலர்களுக்கும் அகரமுதலித் திட்ட இயக்ககம் வழியாகப் பயிற்சியளிக்க வேண்டும்.

5. அரசின் நிதிஉதவிபெற்று வெளியிடப்படும் அகராதிகள், மின்னகராதிகள், அகராதி சார்ந்த ஆராய்ச்சி நூல்கள் ஆகியவற்றை அகரமுதலித் திட்ட இயக்ககம் வழியாக மட்டுமே வெளியிட அரசாணை வெளியிட வேண்டும்.

6. உள்நாடு மற்றும் வெளிநாடுகளில் அகராதித் தொடர்பான அல்லது தமிழ் இலக்கியம், இலக்கணம் தொடர்பான மாநாடுகள், கருத்தரங்குகளில் அகரமுதலித் திட்ட இயக்ககம் கலந்துகொள்ள அரசாணை பிறப்பிக்க வேண்டும்.

7. இதுவரை வாடகைக் கட்டடத்தில் இயங்கிவரும் இவ்வியக்ககத்திற்கென்று தனியாக ஒரு நிலம் ஒதுக்கி, அதில் கட்டடம், நூலகம், அரங்கம், சொல்லுருவாக்க ஆய்வகம் ஆகிவற்றை உள்ளடக்கிய உலகத்தரத்துடன் கூடிய கட்டடத்தை எழுப்ப வேண்டும்.

8. முதல் கட்டமாக ஒவ்வொரு மாவட்டத் தலைநகரிலும் இவ்வியக்ககத்திற்குக் கிளை அலுவலகம் தொடங்கப் பெற்று அதன் பொறுப்பாளர்களாக ஒரு உதவி இயக்குநர், தட்டச்சர், அலுவலக உதவியாளரைப் பணியமர்த்தம் செய்ய வேண்டும்.

9. தேவையான பணியாளர்களை, அலுவலர்களை, மொழியாளர்களைப் பணியமர்த்தி இயக்ககத்தை மேலும் வலிமைப்படுத்த வேண்டும்.



10. இயக்குநருக்கு அடுத்த நிலையிலான உதவி இயக்குநர் பணியிடத்தைத் தோற்றுவித்து அன்னாருக்கு ஓர் ஈப்பு வழங்கி, ஒட்டுநரையும் பணியமர்த்த வேண்டும்.

11. ஏற்கெனவே செயல்பட்டு வருகின்ற தமிழ்க்கலைக் கழகத்தை விரிவுபடுத்தி, அதில் துறைக்கு இருவர் என்ற வீதத்தில் வேளாண்மை, மருத்துவம், வேதியியல், உயிரியல், மேலாண்மை, கல்வி, தொழில்நுட்பம் உள்ளிட்ட பலதுறை வல்லுநர்களை உறுப்பினர்களாக்கி, அவர்களுடைய பணிக்கு மதிப்பூதியம் வழங்கலாம்.

12. 'சொற்குவை'த் திட்டத்திற்காக ஒதுக்கீடு செய்யப்படும் தொடர் செலவினத் தொகையை ஒவ்வொரு ஆண்டும் விடுவித்து, மாணாக்கரிடையே மொழிவிழிப்புணர்வு ஏற்படுத்தி, எதிர்காலத்திலும் தமிழ்மொழி செழிப்புடன் வளர வழிவகை ஏற்படுத்தலாம்.

13. பள்ளி, கல்லூரி மாணவர்களுக்கு மலிவு விலையில் அகராதிகள் அச்சடித்து வழங்கும் பொறுப்பை அகரமுதலித் திட்ட இயக்ககத்திடம் வழங்கலாம். அதைப்போல மலிவு விலையில் அல்லது கட்டணமில்லாமல் அரசு அலுவலர்களுக்கும், பணியாளர்களுக்கும் அகராதிகள் அச்சடித்து வழங்கலாம்.

14. தற்போது முன்னோட்டமாகச் செயல்பட்டு வரும் கட்டணமில்லா அழைமையத்தை விரிவுபடுத்தி, தமிழ்மொழி, மொழி வரலாறு, இலக்கியம், இலக்கணம் ஆகியவற்றில் ஏற்படும் ஐயப்பாடுகளையும் மக்கள் கேட்டுத் தெளிவதற்கு வகை செய்யலாம்.

15. வணிக நிறுவனங்களில் தூயதமிழ்த் திட்டத்தைத் தனிக்கருத்துருவாக உருவாக்கி அதைச் செவ்வனே செயல்படுத்த வழிவகை ஏற்படுத்தலாம்.

மேற்கண்ட 15 கோரிக்கைகளையும் எதிர் காலத்தில் கருத்துருவாக அரசுக்கு வழங்க அகர முதலி இயக்ககம் அணியமாக இருக்கிறது. இதெல்லாம் செயல்பாட்டிற்கு வரும்போது செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககம் 'தமிழ் அகராதி இயக்ககம்' என்று பெயர் மாற்றத்துடன் மற்ற இயக்ககங்களைப் போல, ஒவ்வொரு ஆண்டும் நீட்டிப்புப் பெற தேவையில்லாத ஒரு நிரந்தர இயக்ககமாக மாறி, பின்னர் மக்கள் இயக்கமாக மனத்தில் வேரூன்றும். தமிழ் வளர்ச்சிக்கு இவ்வியக்ககமே அடையாளமாகத் தெரியும். இது உறுதி.

– தங்க. காமராசு
இயக்குநர், அகரமுதலி இயக்ககம்

❖

# நீரும் பேரும்

## திருக்குறள்மணி இறைக்குருவனார்

மக்கள் மட்டுமின்றி அனைத்து உயிரிகளுமே வாழ்தற்கு உணவு இன்றியமையாத் தேவை என்பது வெளிப்படை. அடிப்படைத் தேவைகளுள் காற்று, வெப்பம் முதலிய பிறவற்றைப் போலன்றித் தன் முயற்சியால் தேடித் துய்க்கும் நிலையில் இருப்பதனாலேயே உணவு முதன்மை பெறுகின்றது. உயிரிகளுக்குத் தேவையான உணவுப் பொருள்களை உண்டாக்கிக் கொடுத்து அவற்றுக்குத் தானும் ஓர் உணவாக அமைவது மழைநீரே என்கிறது திருக்குறள் (12)

**நீரின் றமையா யாக்கைக் கெல்லாம்**
**உண்டி கொடுத்தோர் உயிர்கொடுத் தோரே**
**உண்டி முதற்றே உணவின் பிண்டம்**
**உணவெனப் படுவது நிலத்தொடு நீரே**

என்னும் புறநானூற்றுப் பாடல் (18) பகுதி இங்குக் கருதத்தக்கது.

**நீரும் நிலனும் புணரியோர் ஈண்டு**
**உடம்பும் உயிரும் படைத்திசி னோரே**
..........................................................................
**நிலனெளி மருங்கின் நீர்நிலை பெருகத்**
**தட்டோர் அம்ம இவட்டட் டோரே**

நிலத்தையும் நீரையும் ஒருங்கு கூட்டியவர்களே இவ்வுலகில் உடம்பையும் உயிரையும் படைத்தோர் ஆவர் என்றும், நிலம் குழிவாக இருக்கும் இடத்தே நீரை நிரம்பத் தேக்கி வைத்தவர்களே இவ்வுலகில் தம் புகழை நிலைபெறச் செய்தோர் ஆவர் என்றும், அப்பாடலில் பாண்டியன் தலையாலங்கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியனுக்கு ஆசிரியர் குடபுலவியனார் அறிவுறுத்துகின்றார்.

தமிழ்நாடு முன்னாளில் எத்தகைய நீர்வளம் உடையதாக இருந்தது நம் முன்னோர்கள் நீரின் பெரும்பயனையும் அதன் இன்றியமையாமையையும் எத்துணையளவு அறிந்தும் உணர்ந்தும் இருந்தனர்; நீர்வளங் கொண்டு நிலவளம் பெருக்கி ஏருழவு புரிந்து சீருற வாழ்ந்தனர் என்பவற்றை, இயற்கையாக செயற்கையாக அமைக்கப் பெற்றனவுமான நீர்நிலைப் பெயர்களாலேயே நன்கு அறியலாம். அவற்றுள் சில சிறப்புப் பெயர்களாகவும் அமைந்துள்ளன.



புலவர் இறைக்குருவனார்
மேனாள் பதிப்பாசிரியர், அகரமுதலி இயக்ககம்

தமிழில் உள்ள நீர்நிலைப் பெயர்களும் அவற்றைப் பற்றியவிளக்கமும் வருமாறு:

அகழி – கோட்டையைச் சூழ்ந்துள்ள நீர்க்கிடங்கு. கோட்டையின் புறத்தே அகழ்ந்து அமைக்கப்பட்ட நீரரண்

அங்கணம் – சாய்கடை (சலதாரை)

அணை – அணைக்கட்டு

அணைக்கட்டு – ஆற்றின் நீரோட்டத்தை மறித்துக் கட்டப்படும் தடுப்பு.

அலை –கடல்

அருவி – மலையினின்று விழும் நீர்வீழுச்சி

அலங்கல் – நீர்நிலை

ஆலம் – கடல்

ஆவி – குளம்

ஆழி – கடல்

ஆழிக்கிணறு – கடலருகே தோண்டிக் கட்டிய கிணறு,

ஆறு – நிலத்தை அறுத்துப் பெருகியோடும் நீரோட்டம்

இலந்தை – இலஞ்சி

இலஞ்சி – நன்னீர்க்குளம்

உடுவை – அகழி

உப்பங்கழி – கடலையடுத்த உவர்நீர்ப்பரப்பு

உவரி – கடல்

உவளகம் – அகழி

உறைக்கிணறு –சுடுமண்உறையிட்ட கிணறு

ஊசிக் கன்னி– மிகச்சிறு வாய்க்கால்

ஊருணி – ஊர்மக்கள் பருகும் நீர்நிலை

ஊற்று – உள்ளிருந்து சுரக்கும் நீர் நிலை

ஊறல் – கிணறு

ஏரி – பாசன நீர்த்தேக்கம்

ஏல்வை – நீர்நிலை

ஐயாறு – ஐந்து ஆறுகள் ஓடும் ஊர்

ஓடை – அடியிலிருந்து ஊற்றெடுக்கும் நீர் எப்போதும் ஓடிக்கொண்டிருக்கும் நீர்நிலை

கசம் – கயம்

கட்டுக்கிணறு – சரளை நிலத்தில் வெட்டப்பட்டுச் செங்கல்லால் அகச்சுவர் எழுப்பப்பட்ட கிணறு.

கடல் – உலகைச் சூழ்ந்து நிற்கும் உவர்நீர்ப் பெரும்பரப்பு

கம்மாய் – பாசனத்துக்குரிய நீர்நிலை (கம்+வாய்)

கயம் – குளம்; கடல்

கயவாய் – ஆறு கடலிற் கலக்குமிடம்

கலிங்கு – ஆற்றில் பாசனத்திற்காக நீர் தேங்கி வழியுமாறு கட்டப்படும் தடுப்பணை

கலுழி – கலங்கலான நீர்நிலை

கழி – உப்பங்கழி

கழிமுகம் – ஆறு கடலொடு கலக்குமிடம்

கவணைக்கட்டு – பாசனத்தின் பொருட்டு வாய்க்காலில் மரம், வைக்கோல் ஆகியவற்றைக் கொண்டுகட்டப்பட்ட நீர்த்தேக்கம்

கன்னி – கன்னிக்கால்

கன்னிக்கால் – வாய்க்காலிலிருந்து வெட்டப்படும் சிறுகால்

காட்டாங்குளம் – காட்டில் அமைந்த குளம்

காட்டாறு – காட்டில் ஓடும் ஆறு (பெரும்பாலும் பாசனத்துக்குப் பயன்படாதது)

காயல் – உப்பங்கழி

கால் – ஆறு, ஏரி முதலிய நீர்நிலைகளிலிருந்து நீரைக் கொண்டு செல்லும் நீள்வழி

கால்வாய் – நீர்நிலைகளுக்கு நீரைக் கொண்டு செல்லும் பாய்கால்.

கான்யாறு – காட்டாறு

கிடங்கில் – அகழி

கிணம் – கிணறு

கிணறு – நிலத்தில் வெட்டப்பட்டுக் கீழிருந்து ஊறும் நீர்நிலை

கிளையாறு – பேராற்றிலிருந்து பிரிந்து செல்லும் சிற்றாறு.

குட்டம் – ஆழமான பெருங்குட்டை

குட்டை – நீர் தேங்கி நிற்கும் குழி

குடிஞை – வளைந்தோடும் ஆறு

குண்டம் – ஆழமான குளம்

குண்டு – ஆழமான சிறு குளம்

குமிழி – மலைப்பகுதியில் ஊற்று மேலெழும்பிப் பாயும் நீர்நிலை

குழி – கிணறு

குளம் – வட்டமானதும் வாய்மடை வடிமடை உடையதுமான நீர்நிலை.

கூடல் – ஆறுகள் ஒன்றோடொன்று கலக்குமிடம்.

கூடுதுறை – ஆறுகள் ஒன்றொடொன்று கலக்குமிடம், மக்கள் புழங்குமிடம்.

கூபம் – கூவம்

கூவம் – கிணறு

கூவல் – சிறு கிணறு

கேணி – கிணறு

கோட்டகம் – ஆழமான குளம்

கோட்டாறு – மலையாறு

சாய்கடை – கழிவுநீர் ஓட்டம்

சிலம்பாறு – மலையாறு

சிறை – நீர்த்தேக்கம்

சுனை – மலையகத்து ஊற்று

சேங்கை – பாசி மண்டிய குளம்

சேந்து கிணறு – இறை கிணறு

தங்குதுறை – கப்பல் தங்கிச்செல்லும் கடற்றுறை

தடம் – குளம்

தடாகம் – பெருங்குளம்

தளிக்குளம் – நடுவில் கோயிலமைந்த பெருங்குளம்

தாங்கல் – நீர்த்தேக்கம் , ஏரி

திருக்குளம் – கோயிலைச் சார்ந்த குளம்

துணையாறு – பேராற்றில் வந்து கலக்கும் சிற்றாறு

துரவு – பாசனத்துக்குரிய பெருங்கிணறு

துறை – நீர்நிலைகளில் மக்கள் புழங்கும் கரையோரம்

துறைமுகம் – கப்பல்கள்வந்து தங்கிச் செல்லும் கடற்றுறை.

தெப்பக்குளம் – தெப்பத் தேர் சுற்றி வருவதற்கு ஏந்தான திருக்குளம்

தேக்கம் – தேங்கிநிற்கும் நீர்நிலை

தொடுகிணறு – ஆற்றில் அவ்வப்போது தோண்டி நீர்கொள்ளும் மணற்கேணி

தோணித்துறை – தோணிகளை நிறுத்தவும் செலுத்தவும் வாய்ப்பான நீர்த்துறை

நடைக்கேணி – நடந்து செல்லுதற்குரிய படிக்கட்டமைந்த பெருங்கிணறு

நளினி – தாமரைக்குளம்

நாழிக்கிணறு – சிறுகிணறு

நீராழி (மண்டபம்) – நடுவில் மண்டபம் அமைந்த நீர்நிலை

நீராவி (மண்டபம்)– நீராழி (மண்டபம்)

பட்டம் – நீர் தேங்கிநிற்கும் பள்ளம்

படிதடம் – குளிக்கும் நீர்த்துறை

படித்துறை – படிக்கட்டு அமைந்த நீர்த்துறை

படுகர் – படுகை

படுகை – ஆற்றோரத்து நீர்ப்பிடிப்புப் பகுதி

பணை – நீர் தேங்கியுள்ள வயல் நிலம்

பயம்பு – குட்டை

பரவை – கடல்

பல்வளம் – சிறுகுளம்

பழையாறு – புத்தாறு வெட்டப்படுதற்கு முந்திய ஆறு

பள்ளக்கால் – தாழ்விடத்துப்பாயும் வாய்க்கால்

பிள்ளைக்கிணறு – குளத்தின் நடுவில் தோண்டப்படும் கிணறு

பீலி – சிறு இடுக்கு வழியே விசையுடன் வெளியேறும் நீரோட்டம்

புத்தாறு – புதிதாக வெட்டப்பட்ட ஆறு

புணரி – கடல்

பொங்கு கிணறு – ஊற்றுக்கண் கொப்புளித்துக் கொண்டே இருக்கும் கிணறு

பொய்கை – நன்னீர்க்குளம்

மடு – ஆற்றிடையுள்ள ஆழமான பள்ளப்பகுதி

மடை – நீர் பாயும் சிறுவழி

மறுகால் – அதிக நீர் கழிக்கப்படும் வாய்க்கால்; வடிகால்

முக்கூடல் – மூன்று ஆறுகள் கூடுமிடம்

முந்நீர் – கடல்

மூணாறு – மூன்று ஆறுகள் ஓடுமிடம்

மூழியாறு – நீர்நிலை

வட்டம் – வட்டமான நீர்நிலை

வடிகால் – அதிகநீர் வெளியேறும் வாய்க்கால்

வடிமடை – நீர் வெளியேறும் சிறுவழி

வலயம் – வட்டமானநீர்நிலை

வாய்க்கால் – ஆறு முதலிய நீர்நிலைகளிலிருந்து பாசனத்துக்கு நீரைக்கொண்டு செல்லும் நெடுவழி

வாய்மடை – வயலில் நீர்பாயும் சிறுவழி

வாவி – குளம்

வெள்ளக்கால் – வெள்ளநீர்

வேலாழி – கடல்

வேலை – கடல்

❖

---



## உருசியத் தமிழறிஞர் அலெக்சாண்டர் துப்யான்சுகி மறைவு

சுமார் 50ஆண்டுகளாகத் தனி ஒருவராக உருசியாவில் தமிழ் கற்பித்து வந்த அலெக்சாண்டர் துப்யான்சுகி அண்மையில் மறைந்தார்.

சங்க இலக்கியத்தில் இடம்பெறும் சடங்குகள், தொன்மங்கள் குறித்து அவர் ‘ரிச்சுவல் அண்டு மித்தாலஜிக்கல் சோர்சஸ் ஆஃப் தி ஏர்லி தமிழ் பொயட்ரி’ என்ற நூலை வெளியிட்டுள்ளார்.

மாஸ்கோ பல்கலைக்கழகத் தமிழ் இலக்கியப் பேராசிரியரான இவர் 10 பல்கலைக் கழகங்களின் இளநிலை மாணவர்களுக்குத் தமிழ் கற்பித்தார். அன்னாரின் மறைவு தமிழ் இலக்கிய ஆராய்ச்சி மற்றும் வளர்ச்சிக்குப் பெரும் இழப்பாகக் கருதப்படுகின்றது.

# அகரமுதலி இயக்ககத் தமிழ்க் கலைக்கழகக் கூட்டங்கள்










71 ஆவது கூட்டம் 11.11.2020ஆம் நாள் நடைபெற்றது. கூட்டத்தில் தாம்பரம் தேசிய சித்த மருத்துவ நிறுவனத்தின் இயக்குநர் பேரா. மரு.இரா.மீனாகுமாரி, பேரா.மரு.ம.மீனாட்சிசுந்தரம், மரு.தி.இலட்சுமிகாந்தம் உள்ளிட்டோர் பங்கேற்றனர்.

72 ஆவது கூட்டம் 21.11.2020ஆம் நாள் நடைபெற்றது. கூட்டத்தில் கவிதை உறவு இலக்கிய மாதஇதழ் ஆசிரியர் கலைமாமணி சு. ஏர்வாடி இராதாகிருஷ்ணன், இ.ஆ.ப.,பயிற்சி மைய இயக்குநர் பேராசிரியர் தமிழ் இயலன், தேசிய நல்லாசிரியர் புலவர் சு.மதியழகன்,கவிஞர் சீனி.பழனி,கவிஞர் ஞால. இரவிச்சந்திரன் உள்ளிட்டோர் பங்கேற்றனர்.

73 ஆவது கூட்டம் 28.11.2020ஆம் நாள் நடைபெற்றது. கூட்டத்தில் புதுகைத் தென்றல் மாத இதழின் ஆசிரியர் புதுகை திரு.மு.தருமராசன், திருவள்ளூர் மாவட்டம் பாடியநல்லூர் அரசு மேல்நிலைப்பள்ளி தலைமையாசிரியர் திரு.நா.பூபாலமுருகன் உள்ளிட்டோர் பங்கேற்றனர்.

❖

## செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககம், சென்னை– 600 028.

### விலைப்பட்டியல்

| தொ. எண் | புத்தகத்தின் பெயர் | படி ஒன்றின் விலை ரூ. | கழிவு 35% ரூ. | நிகர விலை ரூ. |
|---|---|---|---|---|
| | செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் பேரகரமுதலி | | | |
| 1. | இரண்டாம் மடலம் இரண்டாம் பகுதி கா–கூ | 300/– | 105/– | 195/– |
| 2. | இரண்டாம் மடலம் மூன்றாம் பகுதி கெ–கௌ | 300/– | 105/– | 195/– |
| 3. | மூன்றாம் மடலம் முதற்பகுதி ச–சா | 300/– | 105/– | 195/– |
| 4. | மூன்றாம் மடலம் இரண்டாம் பகுதி சி–சூ | 300/– | 105/– | 195/– |
| 5. | மூன்றாம் மடலம் மூன்றாம்பகுதி செ–ணௌ | 300/– | 105/– | 195/– |
| 6. | நான்காம் மடலம் முதற்பகுதி த–தா | 300/– | 105/– | 195/– |
| 7. | நான்காம் மடலம் இரண்டாம் பகுதி தி–தூ | 300/– | 105/– | 195/– |
| 8. | நான்காம் மடலம் மூன்றாம் பகுதி தெ–தௌ | 300/– | 105/– | 195/– |
| 9. | ஐந்தாம் மடலம் முதற்பகுதி ந–நா | 400/– | 140/– | 260/– |
| 10. | ஐந்தாம் மடலம் இரண்டாம் பகுதி நி–நீ | 400/– | 140/– | 260/– |
| 11. | ஐந்தாம் மடலம் மூன்றாம் பகுதி நு–நௌ | 400/– | 140/– | 260/– |
| 12. | ஆறாம் மடலம் மூன்றாம் பகுதி பெ–பௌ | 400/– | 140/– | 260/– |
| 13. | ஏழாம் மடலம் முதற்பகுதி ம–மா | 400/– | 140/– | 260/– |
| 14. | ஏழாம் மடலம் இரண்டாம் பகுதி மி–மூ | 400/– | 140/– | 260/– |
| 15. | ஏழாம் மடலம் மூன்றாம் பகுதி மெ–மௌ | 400/– | 140/– | 260/– |
| 16. | எட்டாம் மடலம் முதற்பகுதி ய–வ | 400/– | 140/– | 260/– |
| 17. | எட்டாம் மடலம் இரண்டாம் பகுதி வா–வீ | 400/– | 140/– | 260/– |
| 18. | எட்டாம் மடலம் மூன்றாம் பகுதி வெ–வௌ | 400/– | 140/– | 260/– |
| 19. | ஒன்பதாம் மடலம்– இணைப்பு மடலம் முதற்பகுதி அ–கௌ | 400/– | 140/– | 260/– |
| 20. | ஒன்பதாம் மடலம்– இணைப்பு மடலம் இரண்டாம் பகுதி ச–வௌ | 400/– | 140/– | 260/– |
| 21. | பத்தாம் மடலம் – அயற்சொல் முதற்பகுதி அ–ஔ | 400/– | 140/– | 260/– |
| 22. | பத்தாம் மடலம் – அயற்சொல் இரண்டாம் பகுதி க–டௌ | 400/– | 140/– | 260/– |
| 23. | பத்தாம் மடலம் – அயற்சொல் மூன்றாம் பகுதி த–வௌ | 400/– | 140/– | 260/– |
| 24. | பதினொன்றாம் மடலம் – தமிழ் அகரமுதலி வரலாறு | 300/– | 105/– | 195/– |
| 25. | பன்னிரண்டாம் மடலம் – தமிழ்ச் சொற்பிறப்பு நெறிமுறைகள் | 400/– | 140/– | 260/– |
| 26. | செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் பேரகரமுதலி சுருக்கப்பதிப்பு | 1000/– | 350/– | 650/– |
| 27. | தமிழ் வினைச்சொல் அகரமுதலி | 500/– | 175/– | 325/– |
| | **மொத்தம்** | 10,600/– | 3,715/– | 6,890/– |
| | (ரூபாய் ஆறாயிரத்து எண்ணூற்றுத் தொண்ணூறு மட்டும்) | | | |

குறிப்பு:

தொகையை ரொக்கமாக அல்லது வைப்பக வரைவோலையாக/காசோலையாக **The Director, Directorate of Tamil Etymological Dictionary Project, Chennai - 600 113.** எனும் பெயரில் சென்னையில் மாற்றத்தக்க வகையில் வழங்கலாம். **(Payable at Chennai)** வகையில் அல்லது மின்னணு முறையில் தீர்வு செய்யலாம் **(through ECS Payment)**

**IFSC Code : IDIB000K204 Micr Code : 600019175**

**Account No. 759144235 (Indian Bank, Indira Nagar Branch, Chennai-20.)**

# மாணவர்களால் மாணவர்களுக்காக...

### செந்தமிழ்த் திருத்தேர்

### மெய்ந்நிகர் அறிமுகக் கூட்டம்

மாணவர்களால் மாணவர்களுக்காக நடத்தப்படும் செந்தமிழ்த் திருத்தேர் அமைப்பானது தமிழ்ப்பற்று மிகுந்த மாணவர்களுக்குத் தனித்தமிழ், அடிப்படை இலக்கணம் மற்றும் கற்பித்தல் முறை ஆகியவற்றை முறையாகப் பயிற்றுவித்தல், பள்ளி – கல்லூரி மாணவர்களிடம் புதிய சொற்களைப் பெற்று அவற்றை அகரமுதலி இயக்ககத்தின் "சொல் உண்டியலில்" சேகரித்து மாணவர்களிடையே தனித்தமிழ் குறித்தான விழிப்புணர்வை ஏற்படுத்துதல்,

18–40 அகவை வரையிலான பொதுமக்களுக்கு இணையவழி வகுப்புகள் நடத்துதல், கல்லூரிகள் தோறும் சென்று தனித்தமிழ்ப் பயிலரங்கம் நடத்துதல், பள்ளிகள்தோறும் சென்று அடிப்படை இலக்கண வகுப்புமற்றும்தனித்தமிழ்வகுப்புநடத்துதல்உள்ளிட்ட இலக்குகளை நோக்கிச் செயற்பட்டுவருகிறது.

செந்தமிழ்த் திருத்தேரின் மெய்ந்நிகர் அறிமுகக் கூட்டம் 28.11.2020ஆம் நாள் நடைபெற்றது. இதில் செந்தமிழ்த் திருத்தேர் அமைப்பைச் சார்ந்த செல்வன் சா.செல்வக்குமார் வரவேற்புரை வழங்க, செல்வன் ச.திவாகர் அறிமுகவுரையாற்றினார். செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககத் தொகுப்பாளர் திருமதி ஜெ.சாந்தி தொடக்கவுரை யாற்ற, அகரமுதலி இயக்கக இயக்குநர் திரு.தங்க. காமராசு அவர்கள் தலைமையுரையாற்றினார். நிகழ்வுகளைச்செல்வன்ம.ஜ.சந்தீப்தொகுத்துவழங்க, செல்வன் இ.நேரு நன்றியுரை கூறினார்.

### அறிஞர்களின் ஆய்வுரைச் சுருக்கம்

#### 1. கவிஞர் பிரியன்



பிறமொழிக் கலப்பில்லாத் தூயதனித்தமிழ் வளர்ச்சியுற ''செந்தமிழ்த் திருத்தேர்'' எனும் மாணவ அமைப்பானது தமிழக அரசின் அகரமுதலித் திட்ட இயக்கத்தின் சொற்குவையோடு இணைந்து பயணிக்கிறது.

#### 2. கவிஞர் நிரஞ்சன் பாரதி

தமிழக அரசின் செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககத்தின் வழிகாட்டுதலோடு இயங்கி வரும் செந்தமிழ்த் திருத்தேர் என்னும் மாணவர் அமைப்பு , தமிழ்க் குமுகாயத்தின் இடையே தூய தமிழைப் பரப்புவதற்கான முயற்சிகளைச் செவ்வனே மேற்கொண்டு வருகிறது.



தூய தமிழில் பேசுவதற்கான பயிற்சி கொடுத்தல், இலக்கணம் கற்பித்தல், கலைச்சொல் ஆக்கத்தினைப் பயிற்றுவித்தல் என இந்த அமைப்பு முன்னெடுக்கும் முயற்சிகள் சிறப்பானவை. இதோடு உச்சரிப்புப் பயிற்சியையும் வழங்கினால் அது பெரும்பயன் தரும். இவை எல்லாவற்றையும் விட தமிழ் பேசத் தயங்கும் மனங்களில் வேரூன்றியிருக்கும் தாழ்வு மனப்பான்மையைத் தவிடுபொடியாக்கித் தமிழில் பேசுவதும் எழுதுவதும் பெருமைக்குரியன என்ற அடிப்படை உணர்வை இந்த மாணவர் அமைப்பு விதைக்க வேண்டும். எந்த இடத்தில் சந்தித்துக் கொண்டாலும் இரு தமிழர்கள் பேசிக் கொள்ளும் போது அது முற்றாகத் தமிழிலேயே இருக்க வேண்டும். அது செந்தமிழ் எழுத்து நடையாக இருக்க வேண்டியதில்லை. இயல்பான பேச்சுத்தமிழாகவே இருக்கலாம். மேலும், நம் முன்னோர்கள் கட்டமைத்த பண்பாடு, கலாசார விழுமியங்களையும் இந்த அமைப்பு முழுப் பின்னணியோடு சிறார்களுக்கு விளக்க வேண்டும்.

#### 3. உழவுக்கவிஞர் உமையவன்



தேரேறி வரும் தமிழை ஊர்தோறும் கொண்டு செல்லும் பார்போற்றும் அரும் பணியாக மாணவர்களால் மாணவர்களுக்காக நடத்தப்பட்டு, செந்தமிழ்ச் சொற்பிறப்பிய லிலிருந்து புறப்படுகின்ற செந்தமிழ்த் திருத்தேரின் தொண்டினால் தமிழன்னை அகமகிழ்ந் திடுவாள்

#### 4. கவிஞர் வைரபாரதி



தமிழன்னையைத் தேரேற்றி உலகம் முழுவதும் உலா வரச் செய்யவிருக்கும் இளைய பட்டாளத்திற்கு என்னுடைய மனமார்ந்த வாழ்த்துகள்

#### 5. கலைச்செல்வி மாரியம்மாள்

(மறைமலையடிகள் அவர்களுடைய பெயர்த்தி)

மறைமலையடிகள் தோற்றுவித்த தனித்தமிழ் இயக்கத்தின் தாக்கம் அதனுடைய நூற்றாண்டினைக் கடந்து இன்றைய இளைஞர்1களிடம் மாபெரும்

தூயதமிழ்ப் புரட்சியினை ஏற்படுத்தியுள்ளதை நாம் காணமுடிகிறது. செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககத்தின் உறுதுணையுடன் தனித்தமிழினை அடுத்த தலைமுறைக்குக் கொண்டு செல்ல செந்தமிழ்த் திருத்தேரினை வடம்பிடித்து இழுத்திடும் மாணவர்களுக்கு என்னுடைய நல் வாழ்த்துகள்



**6. முனைவர் பா.சம்பத்குமாரி**

பொதுவாக இளைஞர்கள் எந்தப் பணியை எடுத்தாலும் மிகச்சிறப்பாகச் செய்து காட்டுவார்கள். இந்த அமைப்பின் இளைஞர்களோமிகச்சீரியசிறப்பான திட்டமிடலைச் செய்துள்ளார்கள். அந்தவகையில் பாதி வெற்றியை அடைந்துவிட்டார்கள். மீதி வெற்றி என்பது பள்ளிகள்தோறும் பட்டறைகள், கல்லூரிகள்தோறும் கருத்தரங்குகள், திருத்தேரிலே “சொல் உண்டியல்“ அமைத்து ஊர்வலமாய் உலக வலமாய் உன்னதமான தமிழ்ப்பணி செய்வார்கள் என்பதில் எள்முனை அளவும் ஐயமில்லை. இந்தப் பணி மிகச்சிறப்பாக வெற்றியடைய வேண்டுமென்றால் ஊர்கூடி தேர் இழுத்தால் தான் மிகச்சிறப்பாகத் தேர் நிலையை வந்து அடையும்.



**7. முனைவர் இரா. கோட்டீஸ்வரன்**

இளைய தலைமுறையின்
இன்பத் தமிழ்த் தேர்
இத்தேரினை வடம்பிடித்து
இழுக்கும் இளந்தமிழர்களே !
தெருக்களில் மட்டும்
வலம் வரும் தேராக இல்லாமல்
தேசமெங்கும்
செல்லவேண்டும்
பார்முழுதும் வலம் வந்து
பைந்தமிழைச் செழிப்பாக்கும்
பணியாக இருக்க வேண்டும்
தமிழுக்குத் தொண்டு செய்வோன்
தரணி போற்ற வாழ்வான்
தடையேதும் இன்றி
தன்னிகரில்லா உங்கள் பணி
தழைக்கட்டும் ! திக்கெட்டும் !
தோள் கொடுப்போம் தோழர்களே
தொன்மைத் தமிழ் செழித்திடவே !
வாரீர் ! வாரீர் !



**8. முனைவர் அ.மீனா**



த ர ணி யெ ல் ல ா ம் தமிழை உலா கொண்டு செல்லும் தமிழன்னையின் குழந்தைகளுக்கு வாழ்த்துகள். இளைய பருவத்தில் தமிழைத் தனித்து நிறுத்திட பாடுபடும் இளைஞர்களுக்கு மகிழ்வான வாழ்த்துகள். அடிப்படைத் தமிழைச் சிறார்களிடம் கொண்டுசெல்லும் அரிய முயற்சிக்கு மட்டற்ற மகிழ்ச்சி. தேனினும் இனிய தீந்தமிழைத் தேசம் முழுவதிலும் கொண்டு செல்வீர். தூய தமிழ்ச் சொல்லை வாழ்க்கையின் தூணாகக் கொள்வீர். உயிருடன் வாழ உதவும் உதிரம் போல் தமிழைப் பயன்படுத்துங்கள். தமிழ் வாழ தரணி வாழட்டும்.. உங்கள் தமிழ்ப்பணி ஊருணி நீர் போல் ஊற்றி எடுக்கட்டும்.



நவம்பர் 21, 2020 தி நகர் ராஜ் பேலஸ் விடுதியில் நடைபெற்ற, தமிழர் பரிந்துரை வணிகத்தினர் நடத்திய கூட்டத்தில் கலந்துகொண்டு வணிக நிறுவனங்களில் தூய தமிழ்த்திட்டம் பற்றி அகர முதலி இயக்கக இயக்குநர் திரு.தங்க. காமராசு அவர்கள் விளக்கவுரை நடத்திய போது எடுத்த படம். தொழிலதிபர்கள் பெருந்திரளாகக் கலந்துகொண்டு தமிழக அரசையும், அகரமுதலி இயக்ககச் செயல்பாடுகளையும் பாராட்டினார்கள்.

# இயக்கக இடமாற்றம்
# புதிய முகவரி

இதுவரை சென்னை–தரமணி, உலகத்தமிழாராய்ச்சி நிறுவன வளாகத்தில் இயங்கி வந்த செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககம் இடமாற்றம் செய்யப்பட்டு, தற்போது கீழ்க்கண்ட முகவரியில் இயங்கி வருகிறது.

**முகவரி**

செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித்
திட்ட இயக்ககம், நகர் நிருவாக
அலுவலக வளாகம் முதல்தளம்,
எண்.75, சாந்தோம் நெடுஞ்சாலை, எம்.ஆர்.சி.நகர்,
சென்னை – 600 028.
தற்காலிகத் தொடர்பு எண் : 9976454682






# விலையில்லாத அகராதி ஆய்வு மலர் !

324 பக்கங்களுடன் ஆயிரம் ரூபாய் மதிப்புள்ள அகராதி ஆய்வுமலர் 2019–இல் அகராதி ஆய்வறிஞர்களின் 65 ஆய்வுக்கட்டுரைகளும், செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககத்தின் வரலாறும், வளர்ச்சியும், இன்றைய செயல்பாடுகளும் வண்ணப்படங்களுடன் இடம்பெற்றுள்ளன. இம்மலரைக் கட்டுரையாளர்கள், இயக்ககத்துடன் தொடர்புடைய மாணவ–மாணவிகள், பேராசிரியர்கள், ஆராய்ச்சியாளர்கள், தமிழாசிரியர்கள் ஆகியோருக்கும், கல்லூரி–பல்கலைக்கழக நூலகங்கள் மற்றும் பொது நூலகங்களுக்கும் விலையில்லாமல் வழங்க அரசு அறிவுறுத்தியுள்ளது. எனவே மலரைப் பெற விரும்புவோர் தக்க சான்றுகளுடன் இயக்ககத்திற்கு நேரில் வந்து பெற்றுக்கொள்ளலாம்.

இயக்குநர்